# திருப்புகழமிர்தம்



-T.V.வெ



ஆசிரியர்

## கிருபானந்தவாரி

சௌமிய    மார்கழி

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

## சந்தா நேயர்களுக்கு

திருப்புகழமிர்த இதழ்கள் ஒவ்வொரு ஆங்கில மாதமும் 16ந் தேதி (அன்று விடுமுறையானால் அடுத்துவரும் விடுமுறையில்லாத நாளில்) தபாலில் சேர்க்கப்படும். ஆகவே சந்தாத் தொகைகள் எந்தத் தேதியில் கிடைத்தாலும் அடுத்துவரும் 16ந் தேதி யளவில்தான் திருப்புகழமிர்த இதழ்கள் அனுப்பி வைக்கப்படும்.

பத்திரிகை எந்த மாதமாவது கிடைக்காவிட்டால் அந்த (ஆங்கில) மாதம் 25ந் தேதிவரை பொறுத்துப் பார்த்துவிட்டு அதற்குமேல் எமக்கு எழுதவேண்டும். அதற்கு முன் எழுதப்படும் கடிதங்கள் கவனிக்கப்பட மாட்டா. ஒரு மாதத்துக்கு மேற்பட்டுத் தெரிவிப்போர் கிரயம் செலுத்திப் பெறவேண்டும்.

பிரதிகள் மாதாமாதம் ஒழுங்காகக் கிடைக்கப்பெறாத அன்பர்கள் அந்தந்த வட்ட தபால் மேற்பார்வையாளர்களுக்குப் புகார் எழுதியனுப்பி ஒழுங்கு செய்து கொள்ள வேண்டும். இவ்விடம் தபாலில் சேர்ப்பது வரைதான் எமது பொறுப்பு. தபாலில் தவறும் பிரதிகளுக்கு நாம் பொறுப்பேற்க இயலாது.

பதிலை எதிர்பார்ப்போர் பதிலுக்கு உண்டான கார்டு அல்லது கவர், ஸ்டாம்பு இவைகளையும் சேர்த்தனுப்ப வேண்டும்.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

### திருப்புகழமிர்தம் ஆண்டுச் சந்தா

| | |
|---|---|
| இந்தியா, இலங்கை | ரூ. 3—50 |
| மற்ற நாடுகள் | ரூ. 5—50 |

---

## கோடி அர்ச்சனை

திருச்சிராப்பள்ளி குமாரவயலூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்குக் கோடி அர்ச்சனை தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டு வருகிறது. அன்பர்கள் பின்வரும் விலாசத்துக்குப் பணம் அனுப்பி வைத்துக் கோடி அர்ச்சனையில் பங்கு பெறலாம். சஹஸ்ர நாம அர்ச்சனை ஒன்றுக்கு ரூ. 10 - 00.

பொக்கிஷதார், கோடி அர்ச்சனைக் கமிட்டி,
குமார வயலூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோயில்
25, பஞ்சவர்ண சுவாமி கோயில் தெரு,
உறையூர், திருச்சி-3.

உ

ஓம் குஹாய நம !



# திருப்புகழமிர்தம்



"திருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருவ்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

| மலர் 34 | சௌமிய ஞூ—மார்கழி மீ<br>டிசம்பர் 1969 | இதழ் 9 |
|---|---|---|

## திருப்புகழ்

### திருவருணை

இம ராஜனி லாவதெறிக்குங் கனலாலே
இளவாடையு மூருமொ றுக்கும் படியாலே
சமராகிய மாரனெடுக்குங் கணையாலே
தனிமானுயிர் சோருமதற்கொன் றருள்வாயே
குமராமுரு காசடி லத்தன் குருநாதா
குறமாமக ளாசைத ணிக்குந் திருமார்பா
அமராவதி வாழ்வம ரர்க்கன் றருள்வோனே
அருணபுரி வீதிபி னிற்கும் பெருமாளே.

### பதவுரை

குமரா = குமாரக் கடவுளே! முருகா = முருகப் பெருமானே! சடிலத்தன் = சடைமுடியுடைய சிவமூர்த்திக்கு. குருநாதா = குருநாதரே! குற மா மகள் = குறவர் குலத்தில் வளர்ந்த பெருமை மிகுந்த வள்ளியம்மையின், ஆசை தணிக்கும் = விருப்பத்தை நிறைவேற்றும், திரு மார்பா - அழகிய மார்பை யுடையவரே! அமராவதி வாழ்வு = இந்திரபுரியாகிய பொன்னகர வாழ்வை, அமரர்க்கு அன்று அருள்வோனே = தேவர்களுக்கு அன்று அருள் புரிந்தவரே! அருணபுரி

வீதியில் நிற்கும் = திருவண்ணுமலை வீதியில் வீற்றிருக்கும், பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! இம ராஜன் = பனிக்கு அரசனுகிய, நிலா அது எறிக்கும் கனலாலே = சந்திரனுனவன் வீசுகின்ற நெருப்பாலும், இளவாடையும் = தென்றல் காற்றும், ஊரும் = ஊரவர்களும், ஒறுக்கும் படியாலே = வருத்துகின்ற தன்மையாலும், சமர் ஆகிய = போர்க்கு என எழுந்த, மாரன் எடுக்கும் கணையாலே - மன்மதன் தொடுக்கும் மலர்க் கணைகளாலும், தனி மான் உயிர் சோரும் = தனித்துக்கிடக்கும் மான் போன்ற இப்பெண்ணின் உயிர் சோர் கின்றதே; அதற்கு ஒன்று அருள்வாயே = அதற்கு ஒரு வழி கூறி அருளுவீராக.

## பொழிப்புரை

குமாரக் கடவுளே! முருகப் பெருமானே! சடைமுடி யுடைய சிவபெருமானின் குருநாதரே! குறவர் மகளாகவந்த பெருமையுடைய வள்ளி பிராட்டியின் விருப்பத்தை நிறைவேற் றுந் திருமார்பினரே! இந்திர நகரமாகிய பொன்னகரின் வாழ்வை அன்று தேவர்களுக்கு அருள்புரிந்தவரே! திருவண்ணு மலைத் திருவீதியில் எழுந்தருளியுள்ள பெருமிதமுடையவரே! பனியரசனுகிய சந்திரன் வீசுகின்ற நெருப்பினுலும், தென்றல் காற்றும், ஊரவரும் துன்புறுத்துவதாலும், போர்புரியுமாறு வந்த மன்மதன் தொடுக்கின்ற பாணங்களாலும், தனித்துள்ள இந்த மான்போன்ற பெண் சோருகின்ருளே. இதற்கு ஒரு வழி செய்து திருவருள் புரிவீராக.

## விரிவுரை

இத்திருப்புகழ் அகப்பொருள் துறையில் அமைந்தது. முருகனை நாயகனுகக் கொண்ட பக்குவப்பட்ட ஆன்மா தனித்து வருந்துவதாக இப்பாடல் தெரிவிக்கின்றது.

**இமராஜ னிலாவதெறிக்கும் கனலாலே :—**

இமம்—பனி

சந்திரன் பனிக்கு அரசன். குளிர்ச்சியுடையவன் என்பது பொருள்.

சந்திரன் வீசுகின்ற குளிர்ந்த அமுதகிரணம் காமுகர்க்கு அனல்போல் அல்லலைத்தரும்.

"ஊரைச் சுடுமோ உலகந் தனைச்சுடுமோ
ஆரைச் சுடுமோ அறியேனே—நேரே
பெருப்புவட்ட மானகில் பூங்கொடியீர் இந்த
நெருப்புவட்ட மானநிலா"

என்ற ஒரு தனிப்பாடலால் அறிக.

இளவாடையும் :—

இளந்தென்றல் காற்று காமுகர்க்கு வேதனையைத் தரும்.

ஏ தென்றல்மாருதமே! நீ பிறந்தது எங்கள் சிவபெருமானுடைய சந்தனக் காடுகளையுடைய பொதியமலை; நீ சதா பழகுவது தெய்வ நீராகிய காவிரி பாயும் தமிழ்நாடு; உயர்ந்த இடத்தில் பிறந்தும், குளிர்ந்த நாட்டில் பழகியும் எவ்வாறு இந்த கொடுமையை நீ பெற்றிருக்கின்றாய்? என்று காதல் நோய் கொண்ட பரவையார் கூறுகின்றார். அந்த இனிய பாடல் இது.

பிறந்த தெங்கள் பிரான்மலயத்திடைச்
சிறந்தணைந்தது தெய்வநீர் நாட்டினில்
புறம்பணைத்தடம் பொங்கழல் வீசட
மறம்பயின்ற தெங்கோ தமிழ்மாருதம்.

ஊருமொறுக்கும் படியாலே :—

தனித்த ஒரு பெண்மணியைப்பற்றி ஊரில் உள்ளவர்கள் பலவாறு பேசி வசை கூறுவார்கள்.

"தெருவினில் நடவா மடவார்
திரண்டொறுக்கும் வசையாலே" —திருப்புகழ்

சமராகிய மாரனெடுக்குங் கணையாலே :—

போருக்கு என்று ஆயத்தமாக நிற்கும் மன்மதன் தனித்தவரிடம் நின்று மலர்க்கணைகளைச் சொரிந்து மோகத் தீயை மூட்டுவான்.

தனிமானுயிர் சோரும் :—

முருகனைக் கணவனாக வரித்து அப்பெருமானையடைய விரும்பி, அடையப்பெறாது தனிமையில் உயிர்துடித்து இப்பெண் சோர்கின்றாள்.

அதற்கொன்றருள்வாயே :—

இவ்வாறு இரங்கும் இம்மடவரலுக்கு ஒருவழி செய்து, நீர் கணவனாக வந்து அருள்புரிவீராக: என்று அருணகிரிநாதர் முறையிடுகின்றார்.

நாயகி நாயக பாவத்தில் இப்பாடல் மிக இனிமையாக விளங்குகின்றது

குமரா :—

குமரன்—என்றும் இளமையுடன் இருப்பவன். முருகனுடைய திருநாமங்களில் சிறந்தது குமார நாமம். இப்பெருமானுடைய ஆகமம் குமார தந்திரம் என்று பேர்பெறும். எண்ணில்லாத நாமங்கள் முருகனுக்கு உள. அவற்றில் மூன்று நாமங்கள் சிறந்தவை. முருகன் குமரன் குகன் என்பவை.

"முருகன் குமரன் குகன் என்று மொழிந்து
உருகும செயல்தந்து உணர்வென்றருள்வாய்"

என்பது கந்தரநுபூதி.

குமாரமந்திரத்துக்குக் கந்தரலங்கார வுரையில் 4ம் பக்கத்தில் எழுதியதைக் காண்க.

**முருகா :—**

முருகன் என்ற திருநாமம் மிகச் சிறந்தது. "மொழிக்குத் துணை முருகா என்னு நாமங்கள்" என்று கந்தரலங்காரத்தில் ஆசிரியர் கூறுகின்றார்.

"அரும்பெறல் மரபின் பெரும்பெயர் முருக"—திருமுருகாற்றுப்படை

ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்து, திருஞானசம்பந்தருக்குத் தோழராக விளங்கிய ஒருவர் முருகநாயனார் என்ற பேருடன் திகழ்ந்தார் என்பதனையும் உன்னுக.

**சடிலத்தன் :—**

சடிலம்—சடைமுடி.

சிவபெருமான் சடைமுடியுடையவர். இது துறவுநிலையை யுணர்த்துகின்றது சிவமூர்த்தி பரமயோகி.

**குறமாமகள் ஆசைதணிக்குந் திருமார்பா :—**

திருமாலின் கண்ணிற் பிறந்த சுந்தரவள்ளி, முருகவேளின் ஆணையின்படி, வள்ளிமலையில், மான் வயிற்றில் பிறந்து, குறவர் குலத்தில் வளர்ந்தாள். அவருடைய விருப்பம் நிறைவேற முருகவேள் அவரைத் தழுவி யருள்புரிந்தார்.

**அமராவதி வாழ்வமரர்க்கன் றருள்வோனே :—**

அமராவதி—பொன்னுலகின் தலைநகரம். சூரபன்மனுடைய புதல்வனாகிய பாநுகோபன் போர்புரிந்து, இந்திரன் புதல்வனாகிய ஜயந்தனையும், தேவமாதர்களையும் சிறையில் இட்டனன். பலயுகங்கள் அமரர்கள் சிறையில் கிடந்து துன்புற்றார்கள். அமராவதி நகரை தீக்கு இரையாக்கினான்.

முருகவேள், சூராதியவுணரை வதஞ்செய்து தேவர்களுக்கு பழையபடி அமராவதி வாழ்வை யருள்புரிந்தனர்.

**அருணபுரி வீதியினிற்கும் பெருமாளே :—**

திருவண்ணாமலை வடக்கு ரதவீதியில் எழுந்தருளியுள்ள முருகனை இது குறிக்கின்றது

**கருத்துரை**

அருணைமேவிய அண்ணலே! உன்னைநினைந்து வருந்தும் இப்பெண்ணை மருவியருள்புரிக.

## திருப்புகழ்

இரத சுரதமுலை களுமார்பு குத்த நுதல்வேர் வரும்ப
அமுத நிலையில்விர லுகிரேகை தைக்க மணிபோல்
விளங்க
இசலி யிசலியும ரிதலீலை யுற்று இடைநூல்
நுடங்க உளமகிழ்ச் சியினோடே

இருவ ருடலுமொரு வுருவாய் நயக்க முகமே லழுந்த
அளக மவிழவளை களுமே கலிக்க நயனார விந்த
லகரி பெருகஅத ரமுமே யருத்தி முறையே யருந்த
உரையெழப் பரிவாலே

புருவ நிமிரஇரு கணவாள் நிமைக்க வுபசார மிஞ்ச
அவச கவசமள வியலே தரிக்க அதிலை யநந்த
புதுமை விளையஅது பரமா பரிக்க இணைதோளு
மொன்றி அதிசுகக் கலையாலே

புளக முதிரவிர கமென்வாரி தத்த வரைநாண் மழுங்க
மனமு மனமுமுரு கியெயா தரிக்க வுயிர்போ லுகந்து
பொருள தளவுமரு வுறுமாய வித்தை விலைமாதர்
சிங்கி விடஅருட் புரிவாயே

பரவு மகரமுக ரமுமேவ லுற்ற சகரால் விளைந்த
தமர திமிரபிர பலமோக ரத்ந சலராசி கொண்ட
படியை முழுதுமொரு நொடியே மதித்து வலமாக
வந்து சிவனிடத் தமர் சேயே

பழநி மிசையிலிசை யிசையே ரகத்தில் திருவா
வினன்கு
டியினில் பிரமபுர மதில்வாழ் திருத்த ணிகையூடு
மண்டர்
பதிய முதியகதி யதுநா யெனுக்கு முறவாகி
நின்று கவிதையைப் புனைவோனே

அரியு மயனுமம ருமாய சிட்ட பரிபால னன்ப
ரடையு மிடரைமுடு கியெநூற துட்ட கொலைகார
ரென்ற
அசுரர் படையையடை யவும்வே ரறுத்த அபிராம
செந்தி லுரகவெற் புடையோனே

அருண கிரணகரு ணையபூர ணச்ச ரணமே லெழுந்த
இரண கரணமுர ணுறுசூர னுட்க மயிலேறு கந்த
அருணை யிறையவர்பெ ரியகோ புரத்தில் வடபா
லமர்ந்த அறுமுகப் பெருமாளே.

## பதவுரை

பரவும் = புகழப்படுவதும், மகரம் = மகர மீனும், முகரமும் மேவல் உற்ற = சங்குங் கொண்டுள்ளதும், சகரால் விளைந்த = சகரரால் உண்டானதும், தமரம் - பேரொலியுடையதும், திமிரம் - இருள் நிறைந்ததும், பிரபலம் - பேர் பெற்றதும், ரத்னம் = இரத்தின மணிகளையுடையதுமான, சல ராசி கொண்ட = கடல் சூழ்ந்துள்ள, படியை முழுதும் = பூமி முழுதும், ஒரு நொடியே மதித்து = ஒரு நொடிப் போதில் அளவிட்டு, வலம் ஆக வந்து = வலம் வந்து, சிவன் இடத்து அமர் = சிவபெருமானிடத்தில் அமர்ந்த, சேயே = இளம் பாலகரே! பழநி மிசையில் = பழநி மலைமீதும், இசை இசை = புகழ் பொருந்திய, ஏரகத்தில் - சுவாமி மலையிலும், திருவாவினன் குடியில் = திருவாவினன்குடியிலும், பிரமபுரம் அதில் = சீகாழியிலும், வாழ் திருத்தணிகை ஊடும் = என்றும் நீர் மகிழ்ந்து வாழ்கின்ற திருத்தணிகையிலும், அண்டர்பதிய = தேவர்களின் அமராவதியிலும் உறைகின்றவரே! முதிய கதி அது = பழம் பொருளான வீட்டின்பமானது, நாயேனுக்கும் = அடியேனுக்கும், உறவு ஆகி நின்று = கிட்டும்படியாக நின்று, கவிதையை புனைவோனே = அடியேனுடைய பாமாலையை அணிந்து கொள்பவரே! அரியும் = திருமாலும், அயனும் = பிரமனும், அமரரும் ஆய = தேவர்களும்ஆன, சிட்ட பரிபாலன் = மேலோர்களைக் காத்தளிப்பவனாய், அன்பர் அடையும் = அன்பர்களுக்கு வரும், இடரை முடுகியே நூற = துன்பங்களை ஓட்டித் தூளாக்க, துட்ட கொலைகாரர் என்ற = துஷ்டர்களும் கொலைகாரர்களும் ஆன, அசுரர் படை அடையவும் = அசுரர்களின் சேனை முழுவதும், வேர் அறுத்த = அடியுடன் அழித்த, அபிராம - பேரழகரே! செந்தில் = திருச்செந்தூர், உரக வெற்பு = நாகமலை யென்கின்ற திருச்செங்கோடு என்னும் திருத்தலங்களை, உடையோனே = உடையவரே! அருணகிரண = சிவந்த ஒளி வீசுவதும், கருணைய பூரண = கருணை பூரணமாக நிறைந்ததுமான, சரணமேல் எழுந்த = உமது திருவடியைப் பகைத்து மேலெதிர்த்து வந்த, இரண கரண = போரில் மனங்கொண்ட, முரண் உறு = மாறுபட்ட, சூரன் உட்க, சூரபன்மன் அஞ்சும்படி, மயில் ஏறு கந்த = மயில் மீது ஏறி வந்த கந்தக் கடவுளே! அருணை = திருவண்ணாமலையில், இறையவர் - சிவபெருமானுடைய, பெரிய கோபுரத்தில் - பெரிய கோபுரத்தின் கண், வடபால் அமர்ந்த - வட புறத்தில் அமர்ந்துள்ள, அறுமுக பெருமாளே = ஆறுமுகங்களையுடைய பெருமையில் சிறந்த

வரே, இரத = இனிமையுடையதும், சுரத = கலவியின்பந்தருவதுமான, முலேகளும் மார்பு குத்த = கொங்கைகள் மார்பில் அழுந்த, நுதல் வேர்வு அரும்ப = நெற்றியில் வேர்வை துளிர்க்க, அமுத நிலேயில் = விருப்பம் விளேயும் விதத்தில், விரல் உகிர் ரேகை தைக்க = விரல்களில் உள்ள நகக்குறி தைக்க, மணி போல் விளங்க = ரத்னம் போல் ஒளி பெருக, இசலி இசலி = அடிக்கடி ஊடல் கொண்டு, உபரித லீலே உற்று = மேல் விழும் கலவி விளேயாடல் புரிந்து, நூல் இடை நுடங்க = நூல் போன்ற இடை துவள, மகிழ்ச்சியினேடே = உள்ளத்தில் மகிழ்ச்சியுடன், இருவர் உடலும் ஒரு உருவாய் = இருவருடல்களும் ஒன்றுபட்டு ஒருருவாய், நயக்க = இன்பந்தர, முகம்மேல் அழுந்த = முகம்மேலே அழுந்த, அளகம் அவிழ = கூந்தல் அவிழ்ந்து விழ, வளேகளுமே கலிக்க = வளேகள் ஒலிக்க, நயன அரவிந்தம் லகரி பெருக = கண் என்ற தாமரையில் மயக்கம் பெருக, அதரமுமே அருத்தி முறையே அருந்த = வாயிதழ் ஊறலே விருப்பத்துடன் முறைப் படி உண்ண, பரிவாலே உரை எழ = அன்பினுல் சில சொற்கள் பேச, புருவம் நிமிர = புருவம் மேலெழ, கணவாள் நிமைக்க = கண்களில் ஒளிவீசி இமைக்க, உபசாரம் மிஞ்ச = உபசாரங்கள் அதிகரிக்க, அவசம் = ஒருவித மயக்கம், கவசம் அளவு இயலே தரிக்க = மேற் போர்வை போன்ற அளவான தன்மையில் உண்டாக, அதிலே அநந்த புதுமை விளேய = அந்த இன்ப நிலேயிலே கணக்கிடுதற்கு அரிய புதிய உணர்ச்சிகள் தோன்ற, அது பரமா பரிக்க = அவ்வுணர்ச்சியை நன்ருக அனுபவிக்க, இரு தோள்களும் ஒன்றி = இரு தோள்களும் ஒன்றிக் கலந்து, அதிசுக கலேயாலே = மிகுந்த சுகமாகிய பகுதியால், புளகம் முதிர = புளகாங்கிதம் நிறைய, விரகம் என் வாரி தத்த = காமம் என்ற கடல் ததும்பிப் பரவ, அரை நாண் மழுங்க = அரை நாண் மழுங்கி விலக, மனமும் மனமும் உருகியே = மனத்தோடு மனம் உருகி, ஆதரிக்க = அன்பு கொள்ள, உயிர் போல் உகந்து = உயிர்போல் பாவித்து மகிழ்ந்து, பொருள் அது அளவு மருவுறும் = பொருள் கிட்டும் வரையில் கலந்து களிக்கும், மாயவித்தை = மாயவித்தைகளில் வல்ல, விலே மாதர்களின், சிங்கி விட = நஞ்சினே விட்டொழிக்க, அருள் வாயே = அருள் புரிவீராக.

பொழிப்புரை

புகழப்படுவதும், மகரமீனும் சங்கும் உடையதும், சகரர் களால் உண்டானதும், பேரொளியும் இருளும் உடையதும், பேர்பெற்றதும், வசீகரமுடையதும், இரத்தினங்களே புடையது மாகிய கடல் சூழ்ந்த பூமிமுழுவதும் ஒரு நொடிப் போதில் அள விட்டு வலம்வந்து சிவபிரானிடத்தில் அமர்ந்த இளம்புதல் வரே! பழநிமலே மீதும், புகழ்பொருந்திய திருவேரகத்திலும், திருவாவினன்குடியிலும், சீகாழியிலும், உமக்கு உறைவிட

மான திருத்தணிகையிலும், அமராவதியும் உறைகின்றவரே! பழமையான வீட்டின்பம் அடியேனுக்குக் கிட்டுமாறு நின்று அடிமையேனுடைய பாமாலையை அணிந்துகொள்பவரே! திருமால் பிரமன் தேவர்கள் என்ற சிட்டர்களைக் காத்தருள்பவனாய், அன்பர்களுக்கு வருந்துயரங்களை விலக்கித் துகளாக்க, கொலைபுரியுந் துட்டர்களான அசுரசேனை முழுவதையும் வேரறுத்த அழகரே! திருச்செந்தூர், திருச்செங்கோடு என்ற திருத்தலங்களில் எழுந்தருளியிருப்பவரே! செவ்விய ஒளிவீசுவதும், கருணைபூரணமாக நிறைந்ததுமான உமது திருவடியைப் பகைத்து, போரில் மனம் வைத்து எதிர்த்து மாறுபட்டு வந்த சூரபன்மன் அஞ்சும்படி மயிலின்மீது ஏறிவந்த கந்தப்பெருமானே! திருவண்ணாமலையில் சிவபெருமானுடைய திருக்கோயிலின்கண் பெரிய கோபுரத்தின் வடபுறத்தில் அமர்ந்துள்ள ஆறுமுகமுடைய பெருமிதமுள்ளவரே! கலவியின்பந் தரும் இனிய தனங்கள் மார்பில் அழுந்தவும், நெற்றியில் வியர்வை துளிர்க்கவும், இன்டம் பெருகும் விதத்தில் நகக்குறி தைக்கவும், இரத்தினம்போல் ஒளிபெருகவும், அடிக்கடி பிணங்கி மிகுந்த காமவிளையாடல் புரிந்தும், நூல்போன்ற இடை துவளவும், உள்ளத்தில் மகிழ்ச்சியுடன் இருவருடல்களும் ஒன்றாய் மருவியும், முகமேலே அழுந்தவும், கூந்தல் அவிழ்ந்து விழவும் வளைகள் ஒலிக்கவும், தாமரைபோன்ற கண்களில் மயக்கம் பெருகவும், முறைப்படி வாயிதழ் ஊறலையுண்டும், அன்பினால் சில சொற்களைப் பேசியும், புருவம் நிமிரவும், கண்கள் ஒளிவீசி இமைக்கவும், உபசாரங்கள் மிகுதிப்படவும், ஒருவிதமான மயக்கம் கவசம்போல் அளவுடன் உண்டாகவும் அதில் எண்ணற்ற புதிய உணர்ச்சிகள் தோன்றவும், அவ்வுணர்ச்சியை நன்கு அநுபவிக்கவும் இருதோள்களும் ஒன்றிக் கலந்தும், மிகுந்த சுகமான பகுதியால் உடல் பூரிக்கவும், காமக்கடல் ததும்பிப் பரவவும், அரைநாண் விலகவும், மனத்துடன் மனம் ஒன்றுபட்டு உருகவும், அன்பு மிகுதியடையவும், உயிர்போல கருதி, பணம் கிடைக்கும்வரை கலந்தும் களிக்கும் மாய வித்தைகளில் வல்ல, விலைமாதர்களின் நஞ்சுபோன்ற உறவை விட்டொழிக்கத் தேவரீர் திருவருள் புரிவீராக.

## விரிவுரை

இப்பாடலில் முதல் நான்கு அடிகள் கலவியின்பத்தைப் பற்றி விரிவாகக் கூறுகின்றது.

புல்லுதல் சுவைத்திடல் புணர்நகக் குறி
பல்லுறல் மத்தளம் பயிலுந் தாடனம்
ஒல்லொலி கரணமோ டுவகை யாகிய
எல்லையில் புணர்நிலைக் கியைந்த என்பவவே. —கந்தபுராணம்

**கணவாள் :—**

கண் வாள் என்பது கணவாள் என வந்தது.

**நிமைக்க :—**

இமைக்க என்ற சொல் நிமைக்க என வந்தது.

**சிங்கி :—**

குளிர்ந்து கொல்லும் நஞ்சு.

**சகரால் விளைந்த.........கடல் :—**

சகரர் என்ற சொல் சகர் என வந்தது.

சூரியகுல வேந்தனாகிய சகரனுக்கு இரண்டாவது மனைவியாகிய சுமதியிடம் பிறந்த புதல்வர்கள் சகரர்கள்; அறுபதினாயிரவர்.

சகரமன்னன் அசுவமேதப் புரவியை பூமண்டலத்தை வலம் வர விடுத்தான். இந்திரன் அக்குதிரையைப் பாதலத்தில் தவஞ் செய்துகொண்டிருந்த கபிலமுனிவருடைய பின்புறத்தில் கட்டி மறைந்தான். குதிரையைத் தேடிக்கொண்டு சென்ற சகரர்கள் பூமியைச் சுற்றித் தோண்டினார்கள் கபிலரது பின் புறம் குதிரையைக் கண்டு இவர்தான் ஒளித்துவைத்தார் என்று கருதிக் கபிலரைத் துன்புறுத்தினார்கள். கபிலரது கோபாக்கினியால் அறுபதினாயிரஞ் சகரர்களும் சாம்பலாயினார்கள்.

பகீரதன் தவஞ்செய்து கங்கையைக் கொணர்ந்து அவர்களுக்கு நற்கதி நல்கினன். சகரர் தோண்டியதால் சாகரம் எனப் பேர்பெற்றது கடல்.

"சகரர் தொட்டலால் சாகரம் எனப்பெயர் தழைப்ப".

—கம்பராமாயணம்.

**படியை முழுதும் ஒரு நொடியே மதித்து வலமாக வந்து சிவனிடத் தமர் சேயே :—**

கனிகாரணமாக எந்தை கந்தவேள் உலகமுழுவதும் ஒரு நொடியில் வலமாக வந்த வரலாறு. இதனை "கைத்தல நிறைகனி" என்ற பாடலின் உரையில் காண்க.

**அரியுமயனு மமரருமாய சிட்டபரிபாலன் :—**

துட்ட நிக்கிரக சிட்டபரிபாலன். புல்லைக் களைந்து நெல்லை வளர்ப்பதுபோல் தீயவரை நீக்கித் தூயவரைக் காக்கும் தயாநிதி முருகன்.

# கற்பு

## அநந்தநாயகி

அநந்தநாயகி மகாராணியாக இருந்தும், செல்வச் செருக்கு அவளிடம் இல்லை. அவள் திருமேனியில் வைரங்கள் மின்னின. கையிலே வைரம், காலிலே வைரம்; கழுத்திலே! வைரம்; மார்பிலே வைரம்; இடையிலே வைரம். ஆனால் உள்ளத்திலே வைரம் இல்லை. அவள் எப்போதும் பட்டு உடுத்திருந்தாலும், அவசரப்பட்டு ஒன்றையுஞ் செய்வதில்லை. தானமும், நிதானமும், சமாதானமும் இருந்தன.

அவளுடைய கணவன் அமரசிம்மன் என்ற பேரும் சீரும் படைத்தவன். வீரமும் தீரமும் உடையவன். வாள் வலியுந் தோள் வலியு மிக்கவன்.

அநந்தநாயகி சதாவழிபாடும், ஜெபதபங்களும் உடையவளாய், உருகிய உள்ளம் படைத்தவளாய் விளங்கினாள். நற்குணங்கள் யாவும் அவளிடம் பள்ளத்தில் வெள்ளம் தங்குவது போல் தங்கியிருந்தன.

---

அருணையிறையவர் பெரிய கோபுரத்தில் வடபாலமர்ந்த :—

திருவண்ணாமலை வல்லாளமன்னர் புதுக்கிய இரண்டாவது கோபுரத்தின் வடபுறத்தில் எழுந்தருளிய முருகப் பெருமான். இந்த மூர்த்திதான் அருணகிரிநாதரை ஆட்கொண்டு அருளியவர்.

''அருணைநெடுந் தடங் கோபுரத்தமர்ந்த அறுமுகப் பெருமாளே''
—(தமரகுரங்) திருப்புகழ்.

''அடலருணைத் திருக்கோபுரத்தே அந்தவாயிலுக்கு
வடவருகிற் சென்று கண்டுகொண்டேன்''
—கந்தரலங்காரம்—காப்புச் செய்யுள்.

கருத்துரை

அருணைமேவிய ஐயனே! பொதுமாதருடைய உறவாகிய நஞ்சு ஒழிய அருள்புரிவாய்.

அரண்மனையில் பல வேலைக்காரர்கள் தங்கள் தங்கள் கடமைகளைச் செய்த வண்ணமாக இருந்தார்கள். அமரசிம்மனுக்குக் கடவுள் பற்று இருந்தும் கடவுள்மீது குறுகிய அன்பு அமையவில்லை. "கடவுள் கடவுள் என்று வீண் காலங்கழிக்கக்கூடாது" என்பான். கடவுளை வணங்க வேண்டுந்தான். ஓய்வு ஒழிச்சல் இல்லாமல் கடவுளை வணங்குவது அவசியமா? கடவுள் மனவாக்குக்களுக்கு எட்டாதவர். அவரை நாம் இப்படி யிருப்பார்; அப்படி யிருப்பார் என்று கற்பனை செய்து கொண்டு வணங்குவது அறிவுடைமை யாகாது" என்று மனைவியாருடனும், மற்ற நண்பர்களுடனும் வாதிப்பான், அரசனுடன் துணிந்து வாதிட யாருக்குத் தைரியம் உளது? அவன் கூறும் வாதம் தமக்குப் பிடிக்கவில்லையானாலும் சரிசரி என்று தலையசைப்பார்கள். அரசருடைய தயவை நாடி நிற்பவர் வேறு என்ன சொல்ல இயலும்?

அநந்தநாயகிக்குத் தன் கணவருடைய போக்குப் பிடிக்கவில்லை. ஒருநாள் கணவனாரைப் பார்த்து "பெருமானே! கடவுளைக் கண நேரங்கூட மறத்தல் கூடாது. அவன் புகழைப் பேசாத நாள் எல்லாம் பிறவா நாள். மறந்த நாள் இறந்த நாள்.

"பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்
நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்
அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத்துணைப் பொழுதும் மறந்துய்வனோ"

என்கின்றார் அப்பர் பெருமான். கடவுள் சிந்தனை என்ற ஒன்றுதான் மனிதனுக்கும் விலங்குகட்கும் இடையில் உள்ள எல்லைக்கல். இறைவனுடைய சிந்தனையின்றி இறைதேடுவன விலங்குகளும் பறவைகளும்; இறைதேடுமுன் இறைவனைத் தேடுவது உயர்ந்த மனிதனுடைய பண்பு.

"கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை:"

என்கின்றார் உலகமெல்லாம் போற்றும் திருவள்ளுவதேவர். ஆதலால் காதலால் கடவுளை வந்திக்க வேண்டும்; சிந்திக்க வேண்டும்; வாழ்த்த வேண்டும். இந்த வுடம்பும், உடம்பிலுள்ள கருவிகரணங்கள் யாவும் இறைவன் தந்தவை. அக்கருணைக் கடவுள் தந்த கருவிகரணங்களால் அவரை வணங்குவதும், வழிபடுவதும் நன்றிக் கடனாகும். இல்லையேல் நன்றி கொன்ற பாவம் சேரும். இறைவன் எல்லா இடங்களிலும் தங்கியிருக்கின்றான் எல்லா வுயிர்களிலும் உறைகின்றான். அதனால் இறையுணர்வு உடையவர்கள் எல்லா உயிர்களையும் இறைவருடைய கோயிலாகக் கொள்ள வேண்டும். கொண்டு அவ்வுயிர்களுக்கு வரும் இடையூறுகளை யகற்ற வேண்டும். துன்பத்தை நீக்கி இன்பத்தைச்

செய்ய வேண்டும். உண்மையான கடவுள் பற்றுடையவன் எல்லாவுயிர்களுக்கும் நலம் புரிவான். உயிர்களை வெறுக்க மாட்டான். தாங்கள் இவைகளைச் சிந்திக்காமல் மனம் போன போக்கில் போய் வாயில் வந்ததைப் பேசக் கூடாது'' என்று விநயமாகக் கூறினாள்.

இவற்றை நிதானத்துடன் கேட்டான் அமரசிம்மன். "என் அன்புக் கருவூலமே! மாதர் மனோன்மணியே! நீ கூறுவதை நான் மறுக்கவில்லை. இப்போது நான் கூறுவதை நீ கவனமாகக் கேள்.

''நான் கடவுள் இல்லை என்று கூறுகின்ற நாஸ்திகனல்லன். கடவுளை ஒப்புக் கொள்ளுகின்றேன். ஆனால் கடவுளைப் பற்றிக் கூறுகின்றவர் கூறும் வெற்றுக் கொள்கைகளில் எனக்கு ஐயப்பாடுகள் உள்ளன. இப்போது ஒரு விஷயம் கூறுகின்றேன்.

"கஜேந்திர மோட்சம்'' என்ற ஒரு வரலாறு எல்லா நூல்களிலும் பேசப்படுகின்றது. எல்லாப் பெரியோர்களும் கூறியிருக்கின்றார்கள். இதில் ஒரு சந்தேகம். நான் சிந்தனை செய்துதான் செப்புகின்றேன். முரட்டுத்தனமாக மொழிகின்றேனில்லை.

முதலையால் பற்றப்பட்ட யானை தும்பிக்கையை உயர்த்தி நம்பிக்கையோடு ஆதிமூலம் என்று அழைத்தது. உடனே நாராயணர் உடையவிழ, மார்பிலே யுள்ள தொடையவிழ தானே ஓடிப்போய் சக்கரத்தால் முதலையைக் கொன்று யானையைக் காப்பாற்றினார் என்பது கதை.

''தந்தாவளமுன் அழைப்பமனஞ்
சறறுந்தரியா தெழுந்து குல்லைத்
தாமஞ் சரிய உடை சரியச்
சக்ராயுதத்தை முன் நடத்திச்
செந்தாமரைப் பெண் புவிமடந்தை
திகைப்போடெழுந்து பின்தொடரச்
சேடன் முதுகும் அவன் மனமும்
திருப்பாற்கடலும் வெளிறி வெள்கப்
பைந்தார்க் கருடன கடைக்கணருள்
பார்த்து நேரே பறந்துவரப்
பாரக் கொடிய முதலைவதைப்
படவும் பாதம் தரைப்படவும்
வந்தான் மருகா! முருகா! செம்
மலையே வருக வருகவே!
வரதச் ச த் திருமலையின்
மழலைக் குழவி வருகவே.''

என்பது பாடல். இனிய தமிழ். நடையழகு; தொடையழகு எல்லாம் இருக்கின்றன. பாடிய புலவனுடைய கவித்திறனை மெச்சுகின்றேன். அதே சமயத்தில் அக் கதையை நான் மறுக்கின்றேன். திருமால் மீதுள்ள அளவற்ற அசைக்க முடியாத அன்பினால் அக்கதை புனையப் பட்டது. அக் கதையில் உள்ள ஆட்சேபனைகளைக் கூறுகின்றேன். கேள்.

"காட்டில் உள்ள யானையை முதலை துன்புறுத்தியது; இது எங் கும் நடக்கின்ற இயல்புதானே. ஒரு யானையைக்காக்க நாராயணரே வரவேண்டுமா? அப்படி வந்திருந்தால் அது அவர் பெருமைக்கு இழுக் கல்லவா? ஒரு எலியை யடிக்க பெரிய காமா பயில்வான் குண்டாந் தடியை எடுத்துக்கொண்டு ஓடினான் என்றால் அப்பயில்வானுடைய வலிமைக்கு இழிவு அல்லவா? ஏன் எல்லாம் செய்யவல்ல நாராயணர், திருப்பாற்கடலில் பள்ளிகொண்டிருந்த வண்ணமே முதலை சாகட்டும் என்று எண்ணினால் முதலை சாகாதா? 'முதலை அழிக' என்று மொழிந் தால் முதலை அழியாதா? அன்றி முதலையைக்கொல்ல வைகுண்ட வாசனே ஓடி வரவேண்டுமா? ஒரு சிறு பொருளை வாங்கும் பொருட்டு அரசனாகிய நான் கடை வீதிக்குப்போகின்றேனா? இல்லையே? அரண் மனையில் எண்ணில்லாத வேலைக்காரர்கள் இருக்கின்றார்கள். நான் அவர்களைத்தானே அனுப்புகின்றேன். இதுபோல் ஒரு சிறு முதலை யைக் கொல்ல பெருமாளே வரவேணுமா? அங்கு எம்பெருமாள் அரு கில் பரிஜனங்கள் இல்லையா? ஜெய விஜயர்கள் இருக்கின்றார்கள் தானே? கருடாழ்வார் இருக்கின்றார். எத்தனையோ பணியாளர்கள் இருக்கின்றார்கள், யாராவது ஒருவனை அனுப்பினால் முதலையைக் கொன்று யானையைக் காப்பாற்றுவான்தானே? இந்தச் சிறிய கருமத் தைச் செய்ய அரிமுகுந்தனே ஓடிவந்தான் என்பதை அறிவுபடைத்த எவன்தான் ஒப்புக்கொள்ளுவான். இந்தக் கதை அறிவுக்குப் பொருந்துகின்றதா? இதை ஒப்புக்கொண்டால், நாராயணர் தானே வந்தால் தன்னை எல்லோரும் புகழட்டும் என்று எண்ணுகின்றாரா? சிலர் அன்னதானம் புரியும்போது அன்னத்தட்டும் கரண்டியும் கையில் வைத்துக்கொண்டு படம் பிடித்துக் கொள்ளுவார்கள். தான் அன்ன தானம் புரிவது செய்தித்தாளில் வரட்டும் என்ற தற்பெருமைக்காக. பெருமாள் கதையும் இதுபோல்தானே இருக்கின்றது, நான் கேட் பதை நன்கு மனதில் வாங்கிக்கொள். ஒரு முதலையைக் கொல்ல பேராற்றல்படைத்த பெருமாள் வரவேண்டுமா? இதற்குத் தகுந்த பதில் சொல். இப்போதே சொல்லவேண்டிய அவசியமில்லை யோசித்து நாளைக்குச் சொல்" என்றான்.

கணவனார் கூறிய சொற்களைக் கேட்ட அநந்தநாயகி மனதுக்குள் சிரித்துக் கொண்டாள். என் மதிப்புக்குரிய மணவாளரே! நாளை மாலை இதற்கு விடை கூறுவேன்" என்றாள்.

மனைவியைத் தன்மதி மிகுந்த சொல்லாற்றலால் மடக்கி அடக்கி விட்டோம் என்று மன்னன் மனமகிழ்ந்தான் பிறகு அவன் அரச காரியத்தில் ஈடுபட்டான். அநந்தநாயகி நல்ல அறிவுத்திறன் உடையவள். சாத்திரத்தாலும் தோத்திரத்தாலும் கூறினுல் கணவன் திருந்தமாட்டார். அவர் தன்னைத்தானே அறிவாளி என்று எண்ணிக்கொண்டு இருக்கின்ருர். அவருக்குத் தக்கமுறையில் விடைகூற வேண்டும் என்று ஆழமாக நினைத்து ஒரு முடிவு செய்தாள்.

நல்ல சிற்பிகளை அழைத்தாள். அவளுக்கு ஒரே மகன். ஐந்து வயது. அரசிளங்குமரன். ராஜசிம்மன் என்று பேர். அந்த புதல்வனைப்போல் ரப்பர் பதுமை செய்யச் சொன்னுள். செய்து முடித்த பின் மகன் அணிகின்ற ஆடை அணிகலன்களையிட்டு அலங்கரித்து ஆயத்தம் செய்து வைத்தாள். தன் அந்தரங்கத் தோழியிடம் கூறினுள்.

"தோழி! நாளை மாலை நானும் அரசரும் அரண்மனையைச் சூழ்ந்துள்ள அகழியில் ஓடத்தில் உலா வருவோம். அப்போது நீ இப்பதுமையை அரண்மனையின் மேல் மாடியில் வைத்து அகழியில் தள்ளிவிடு" என்று சொல்லிவைத்தாள்.

மறுநாள் மாலை அரசனும் அரசியும் அரண்மனைப் பூங்காவில் உலாவினுர்கள்.

"என்னருமைத் துணைவியே! நான்கேட்ட வினவுக்கு இன்றுமாலை விடையளிப்பதாக விளம்பினுயே. ஒன்றும் அதுபற்றிப் பேச்சேயில்லையே? ஆதலால் அது கற்பனைக்கதை என்பதை ஒப்புக்கொள்ளுகின்றனையா?" என்று கேட்டுப் புன்முறுவல் பூத்தார்.

அநந்தநாயகி "அரசர் பெருமானே! ஆருயிர்க் காவலரே: சிறிது ஓடத்தில் அகழியில் உலாவலாமா!" என்ருள்- அரசர் சரியென்ருர். அரசரும் அரசியும் அகழியில் சிறு ஓடத்தில் உலாவினுர்கள். அப்போது அரண்மனையின் மேல் மாடியில் தன் மகனுடைய உருவத்தை அரசர் பார்த்தார். அந்த வுருவம் அகழியில் வீழ்ந்தது.

அவ்வளவுதான். அரசர் ஆ! என்று அலறினுர். "பெண்ணே! நம் கண்ணன்; அரண்மனையிலிருந்து அகழியில் வீழ்ந்துவிட்டான். குலக்கொழுந்தாம் கோமகன், என் மாமகன் ......"என்று புலம்பி ஓடத்திலிருந்து அகழியில் குதித்தார். நீந்தி ஓடினுர். அந்த உருவத்தைப் பற்றிக் கொணர்ந்து ஓடத்தை யடைந்தார்.

ஓடத்தில் ஏறி உற்றுப்பார்த்தார். அது மகனைப் போன்ற ரப்பர் பதுமை, நாணினுர்.

அநந்தநாயகி, "அன்புடையீர்! இப்போது சிந்தியும்; நம்ம குழந்தை நீரில் விழுந்தான் என்று அறிந்த வேந்தர் வணங்கும்

# முருகன்

வழிபட்டோர்க்கு எளிதில் கருணை புரியுந் தெய்வம் முருகன் எனவுணர்க.

"ஸ்கந்தஸ்ய கீர்த்திம் அதுலாம்
கலிகல்மஷ நாசினீம்!"

என்ற திருவாக்கு இதனை வலியுறுத்தும். கலியில் விளையும் வன்மை யான பாவங்களைப் போக்க வல்லது முருகவேளின் புகழ் ஒன்றேயாம் என்பது இதன் பொருள்.

குழந்தைகள் தம்பால் உள்ள விலையுயர்ந்த பொருள்களைச் சிந்திக் காமலும், கேட்போனுடைய நிலையை எண்ணுமலும் தரும் இயல்பு உடையன.

என்றும் அகலாத இளமையுடைய முருகன் தன்னை விரும்பி வழிபடும் அடியார்களின் துன்பங்களை நீக்கி இன்பங்களை யருள வல்லான்.

---

ராஜாதிராஜனுகிய நீரே நீரில் குதிக்கவேணுமா? அரண்மனையில் எத் தனை சிப்பந்திகள், தண்டச்சோறு தின்று கொழுத்திருக்கின்றூர்கள். அக்கரையில் அக்கரையுடன் எத்தனை ஆட்கள் நின்று கொண்டிருக் கின்றூர்கள். ஓடக்காரனும் இங்கு இருக்கின்றுனே? இவர்களில் எவனையாவது ஒருவனுக்கு உத்தரவு கொடுத்திருக்கலாந்தானே? இந்தச் சின்ன வேலைக்காகத் தாங்களே உயர்ந்த ஆடைகள் நீரில் நனையக் குதித்து ஓடினீரே? இது உங்கள் பெருமைக்கு இழுக்கல்லவா? இப்படிச் செய்தீர் என்ற செய்தி வெளியே பரவுமானுல், ஒரு பகுத் தறிவு வாதி ஒப்புக் கொள்ளுவானு? அப்படியெல்லாம் அரசர் செய் திருக்கமாட்டார். எவனே கட்டிவிட்ட கதை என்றுதானே கூறு வான். இப்போது இது கதையா! நடந்ததா? உங்கள் மகனை ஆத ரிக்க நீரே விரைந்து ஓடியதுபோல். உலகத் தந்தையான நாராயணர் தன் குழந்தையைக் காக்கத் தானே ஓடி வந்தார்? இப்போது விடை தெரிகின்றதா?" என்று கூறிப்புன்னகை புரிந்தாள். அமரசிம்மன் உண்மையுணர்ந்தான். தன் அறியாமைக்கு வருந்தினுன். நல்ல பக்தி நெறியில் திருந்தினுன். அன்பு வழியில் பொருந்தினுன். ஆன்றோர் களிடம் அன்பு கொண்டான். அது முதல் தானும் அரசியாரைப் போல் வழிபாடு செய்தான்.

ஓம் என்ற பிரணவம் அ. உ. ம. என்ற மூன்று அங்கங்களை யுடையது.

அ—சிருஷ்டிக்கின்றது.

உ—ரக்ஷிக்கின்றது.

ம—ஒடுக்குகின்றது.

இந்த மூன்றில் ரக்ஷிக்கின்ற எழுத்தாகிய உகரமே சிறந்தது. நாம் இறைவனிடம், "ஈசனே! என்னை சிருஷ்டி செய்," என்று கேட்கின்றோமா? ஈசனே என்னை சம்மாரம் செய் என்று கேட்கின்றோம்? இல்லை "என்னை ரட்சிக்க வேண்டும்" என்றுதானே வேண்டுகின்றோம். "பாஹி மாம்" என்பர் வடமொழியில்.

எனவே உகரம் ரக்ஷக எழுத்து என உணர்க. அதனால் தான் உலகங்களையும் திருத்தொண்டர்களையும் ரக்ஷிக்கின்ற நூலாகிய பெரிய புராணத்தின் தொடக்கத்தில் 'உலகெலாம்' என்று தொடங்குகின்றது.

கம்ப நாடரும் "உலகம் யாவையும்" என்று தொடங்குகின்றார். நக்கீரரும் "உலகம் உவப்ப" என்று ஆரம்பிக்கின்றார். இதனால் உகரம் எத்துணை முக்கியமுடையது என்பது நன்கு புலனாகின்றது.

ஆன்மாக்களுக்கு மூன்று நிலைகளுண்டு. கேவலம், பெத்தம் என்பன.

இருளும் அறியாமையும் துன்பமும் சேர்ந்த நிலையில் ஆன்மாக்கள் கிடந்தன. அது கேவல திசை.

இருளும் ஒளியும், துன்பமும் இன்பமும் அறிவும் அறியாமையும் விரவிய நிலையில் வாழ்கின்ற நிலை பெத்த திசை. இன்பமே, அறிவே, ஒளியேயாய் நின்றநிலையில் ஆன்மா இன்புறும் நிலை முத்த திசை யாகும். எனவே ஆன்மாக்களுக்கு மூன்று நிலைகள் என வுணர்க.

முருகு—என்பது பகுதி.

அன்—ஆண்பால் ஒருமை விகுதி.

முருகு என்ற சொல்லில் ம்+உ, ர்+உ, க்+உ, என்று மூன்று உகரங்கள் வருவதை யுணர்க.

கேவல திசையிலும், பெத்ததிசையிலும் முத்த திசையிலும் காக்குங்கடவுள் முருகன் என்பது இதனால் போதரும்.

இதனால் முருகன் என்ற சொல் சிறப்புடையது இது வழி வழி வந்த மகாவாக்கியமாகும்.

"அரும் பெறல் மரபின்
பெரும் பெயர் முருக"

என்கின்றார் நக்கீரர்.

கிழக்கே, தெற்கே, மேற்கே, வடக்கே, மேல் உலகிலே, கீழ் உலகிலே—ஆக ஆறுதிசைகளில் உள்ள ஆன்மாக்களை உய்விக்க

இந்த ஆறு திசைகளையும் பார்த்தருளும் ஆறுமுக வுருவுடன் அப்பரம பதி விளங்குகின்றார்.

வினைகளைக் களையும் வேலையும் பயங்களை யகற்றும் மயிலையும் உடையவனாக விளங்குகின்றார்.

சிவம்—சத்து, உமை—சித்து, முருகன் ஆனந்தம்.

இதுதான் சோமாஸ்கந்த மூர்த்தம்.

விநாயகரும் சிவபுத்திரராக இருப்பினும் சிவனுக்கும் உமைக்கும் இடையில் விநாயக மூர்த்தி யமைவதில்லை. முருக வுருவமே அமைந்துளது. இதனால் முருகன் ஆனந்த வடிவம் என்பதும், அப்பரம் பொருளை வழிபட்டோர் ஆனந்தம் பெறுவர் என்பதும் உறுதியாகின்றது,

சத்தெனப்படும் தாவில் சிவத்தினும்
சித்தெனப்படும் தேவி யிடத்திலும்
புத்திரப் பெயர் பூண்டில கானந்த
வத்துவின் கழல் வாழ்த்தி வணங்குவாம்.

உயிர்கள் யாவும் விரும்புவது ஆனந்தம் என்ற ஒன்றையே யாகும். இந்த ஆனந்தத்தை யருளவல்ல தெய்வம் முருக மூர்த்தி ஒன்றேயாகும்.

சுப்ரமண்ய அஷ்டோத்தர சத நாமாக்களில் "ஆனந்தாய நம:" என்று ஒரு நாமம் வருவதையும் உன்னுக.

குழந்தைகளால் வரும் இன்பம் சுதானந்தம்; முருகனால் வரும் இன்பம் சதானந்தம்.

"ஞானம் சுரப்பமகிழ் ஆனந்த சித்தியோடெ
நாளுங்களிக்க பதம் அருள்வாயே"

என்று அருணகிரிப் பெருமான் கூறுகின்றார்.

ஆனந்தம் ஞான ஒளியால் விளையும். முருகன் ஞான ஒளி மயமானவர்.

"ஒளியில் விளைந்த உயர் ஞான பூதரத் துச்சியின் மேல்
அளியில் விளைந்ததோர் ஆனந்தத் தேனை"

—கந்தரலங்காரம்

"பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாக"

என்கின்றார் கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகள்.

எனவே ஞானத்தை விரும்புவோர் ஒளியை விரும்புவோர்— ஆனந்தத்தை விரும்புவோர் முருகப் பெருமானையே வழிபட வேண்டும்.

முருகப்பெருமான் கலியில் கண்கண்ட தெய்வம்; கலியுக வரதன்

ஆதலால் முருகனைக் காதலால் அனைவரும் உள்ளன்புடன் உருகி வழிபட்டு எல்லா நலன்களையும் எளிதிற் பெறுவார்களாக.

# மகாபாரதம்

## சாந்தி பருவம்

### மோக்ஷ தர்மம்

(192-ஆம் பக்கத் தொடர்ச்சி)

பெரிய ஆற்றல்படைத்த அந்தக் கருடர்கள் "ஓ தேவரே இது என்ன விந்தை! சரீரத்தால் எங்கள் குலத்தில் உண்டானது போன்றதும், மிக அற்ப வலிமையுள்ளதும், மிகவும் அற்ப உடம்புள்ளதுமான இது என்ன பட்சி இங்கு வந்துள்ளது?" என்று கேட்டார்கள். அதைக் கேட்டு நான் நாணமும் அச்சமும் அடைந்தேன். கர்வத்தை விட்டேன். மதிபெற்றேன். நடுக்கமடைந்தேன்.

"கருடா வா" என்ற வார்த்தையைக் கேட்டேன். நான் செல்லத் தொடங்கினேன். நூறு *பரார்த்த யோசனை தூரம் பறந்து சென்றேன் அங்கு நூறு கோடி பிரமதேவர்களைக் கண்டேன். நாராயணர் "வா" என்ருர். விளாம்பழத்துக்கு ஒப்பான பல அண்டங்களைப் பார்த்தேன். இருள் சூழ்ந்திருந்தது. திருமால் ஒரு அண்டத்தைப் பிளந்தார். மறுபடியும் ஒரு பூதம் என்னை எடுத்தெறிந்தது. அங்கே பிரமதேவரையும் ஏழு கடல்களையும் தேவர்களையும் கருடக் குழுக்களையும், என் தாய் வினதையையும் பார்த்தேன். பின்னர் மாதவன் அருள்பெற்று உய்ந்தேன்: இத்தகைய நாராயணருடைய பெருமை அளவற்றது. அவரை அன்புநெறி ஒன்ருலேயே அடையலாம்" என்று கூறிவிட்டு, என் தாய் கங்காதேவியிடம் விடைபெற்றுச் சென்ருர். ஆதலால் வாசுதேவரை அன்பு செய்து அருள் பெறுவாய் என்ருர்.

தருமர் "தந்தையே! மோட்சத்துக்குரிய முக்கியமான யோகத்தை உபதேசிக்க வேண்டும்" என்ருர்.

### குரு சிஷ்ய உபதேசம

பீஷ்மர் "அறிவிற் சிறந்தவனும் அடக்கமுள்ளவனும் ஆன ஒரு சீடன், அறநெறி வழுவாத ஒரு குருநாதரைக் கண்டு வணங்கினன். "நான் எதிலிருந்து உண்டானேன்?" என் ஐயந்திர உண்மையை உரைத்தருளும்" என்று கேட்டான்.

---

* பரார்த்தம்—பெரிய எண். பிரமாவின் ஆயுளில் பாதி.

குரு ''சீடனே! நீ என்பது ஆன்மா! அது எப்போதும் உள்ள நித்தியமானது. அது உண்டாகவில்லை. கால சக்கரம் இடையருது சுழன்று கொண்டிருக்கின்றது. காலம் என்பதனுல் உலகம் தோன்றி மறைகின்றது. ஆன்மாவின் வினையின் காரணமாகப் பலவகையான உடம்புகள் வருகின்றன. பரம்பொருள் என்றும் உள்ளவர். அவர் திருவாக்கு வேதம். உலகம் ஒடுங்கியபோது வேதமும் ஒடுங்கியது.

வேதங்களை பிரமதேவர் விளக்கம் புரிந்தார். வேதாந்தங்களை வியாசபகவான் கூறினுர். நீதி சாஸ்திரங்களை சுக்ரபகவான் கூறினுர். சங்கீத சாஸ்திரமாகிய காந்தர்வ வேதத்தை நாரதர் கூறினுர். தநுர் வேதத்தைப் பாரத்துவாசர் கூறினுர்.

தேவ சரிதைகளை முனிவர் வரவாறுகளைக் கர்க்கர் சொன்னுர். மருத்துவ நூலை கிருஷ்ணுத்ரேயர் கூறினுர். நியாய சாத்திரத்தை கௌதமர் கூறினுர். வேதாந்தத்தை வியாசர் விளக்கினுர். சிற்ப நூலை பிருகு முனிவர் கூறினுர்.

மூலப்ரக்ருதியிலிருந்து இறைவன் இந்த உலகத்தைப் படைத்தருளினுர். இந்த உடம்புக்குப் புரம் என்று பேர். புரம் என்ற சரீரத்துக்குள் இறைவன் இருப்பதனுல் புருஷன் என்று பேர் பெறுகின்ருன். இறைவன் கண்ணில்லாமல் எல்லாவற்றையுங் காண்கின்ருன்: காதில்லாமல் எல்லாவற்றையுங் கேட்கின்ருன். நாவில்லாமல் பேசுகின்ருன். காலில்லாமல் எங்கும் சஞ்சரிக்கின்ருன்.

மிகச் சிறிய விதையிலிருந்து மிகப் பெரிய ஆலமரம் தோன்றுவது போல சூட்சுமத்திலிருந்து தூலமான உலகம் தோன்றுகின்றது. வினையினுல் உடம்பு தோன்றுகின்றது. எண்ணெயின் தொடர்பு காரணமாக எள் செக்கில் நசுங்குவதுபோல் ஆசையின் காரணமாக உயிர்கள் வேதனை யடைகின்றன. உயிர்கள் பிறப்பு இறப்பு என்ற சக்கரத்தில் அகப்பட்டுச் சுழலுகின்றன. வறுபட்ட விதை திரும்பவும் முளைக்காததுபோல் ஞானுக்கினியுடன் கூடிய ஆன்மா பிறப்பை யடைவதில்லை.

விருப்பு வெறுப்பின்றி இருப்பவர்கள் ஞானிகள். பயனை விரும்பாமல் கர்மங்களைச் செய்யவேண்டும். பயனை விரும்பிச் செய்யும் கன்மங்கள் பிறவியைத் தருகின்றன. இந்திராதியராகவேண்டும் என்ற விருப்பமும் இருக்கக் கூடாது. கட்டையிலிருந்து கனல் தோன்றிக் கட்டையைக் கனலாக்குவதுபோல். சிவ யோகத்தால் ஆன்மாவில் இருந்து பரமான்மா வெளிப்பட்டு சீவனைச் சிவமாக்கிக் கொள்ளுகின்றது. ஞானிகள் உயிர் வாழ்வதற்கு மட்டும் அற்ப உணவை உண்ணுவார்கள். உடம்பு முகந்து கொண்ட வினை நுகர்ந்து முடிந்தவுடன் ஞானிகள் பரமான்மாவில் லயம் அடைகின்ருர்கள்'' என்று கூறினுர்.

"பாரத! சத்துவகுணம் தேவர்களுக்குரியது; ராஜஸம் தாமஸம் என்ற குணங்கள் அசுரர்களுக்குரியன. ரஜோ குணத்தாலும் தமோ குணத்தாலும் கோபம் லோபம் மோகம் முதலியன தோன்றுகின்றன. அகங்காரத்தால் செய்த கன்மங்களினுல் பிறப்பு எய்துகின்றது பிறப்பையடைந்தவன் செல்வத்தையும் நிலத்தையும் விரும்பிப் பெருந்துயரம் அடைகின்ருன்.

ஞான வாளால் ஆசையென்ற முட்செடிகளை வெட்டினவன் பிறப்பை யடையமாட்டான். மனத்தை ஒரு வழியில் அடக்கவேண்டும். உத்தமர்கள் பெண்களைப் பற்றிக் கூறும் கதைகளைக் கேட்கக் கூடாது. உடையின்றி பார்க்கவும் கூடாது. ஒரு நாளைக்கு மூன்று முறை நீராடவேண்டும். நீரில் முழுகி அகமர்ஷணம் என்ற மந்திரத்தை ஜெபிக்கவேண்டும். அகிம்ஸை, உண்மை, பொறுமை, நேர்மை இவைகளைக் கடைப்பிடிக்க வேண்டும். பிறருடைய குற்றங்களை ஆராய்தல் கூடாது. அவைகளைக் கூறவும் கூடாது. சதா பரம் பொருளை நாடி மனத்தை அடக்கி சமாதி செய்யவேண்டும். வெளிப்படையான உலகில் வெளிப்படையில்லாத பிரம்மத்தை தியானத்தினுல் வெளிப்படச் செய்யவேண்டும். பாலில் மறைந்துள்ள நெய்யை கடைந்து எடுப்பதுபோல் என்று உணர்க. ஆசையால் உலகம் கட்டுண்டிருக்கின்றது. ஆசையை விட்டவன் பரம்பொருளைத் தொட்டவனுகின்ருன். ஆதலால் நல்ல ஆசாரத்துடன் பரம்பொருளை நாடி இடையருது தியான யோகஞ்செய்து, பிறப்பை யொழித்து பரம் பொருளையடைவாயாக" என்ருர்.

## பஞ்சசிகர் ஜனகருக்கு உபதேசித்தது

"தருமநந்தனு! மோக்ஷ தருமங்களை யறிந்தவனுன ஜனகதேவன் என்னும் ஜனகன் மிதிலாபுரியை அரசுபுரிந்து கொண்டிருந்தான். அவன் தண்ணீர் ஒட்டாத தாமரை இலைபோல் ஆசாபாசமின்றி வாழ்ந்தான். அவனுடைய அரண்மனையில் வெவ்வேறு தருமங்களைக் கூறுகின்ற நூறு ஆசிரியர்கள் உறைந்தார்கள்.

பஞ்சசிகர் என்ற முனிவர் அங்கு வந்தார். அவர் ஆஸுரியின் சீடர். கபிலையின் புதல்வர். சிறந்த தத்துவஞானி. "ஜனகனே! சிலர் அநுமானத்தையும் ஆகமப் பிரமாணத்தையும் உடன்படாமல், காண்டல் அளவை ஒன்றை மட்டுமே கொண்டு உடம்பே ஆன்மா என்றும், மோக்ஷம் முதலியன இல்லையென்றும் கூறுவர். இது பிழை. ஆன்மா உடம்புக்கு வேருனது. அது கண்ணுக்குத் தெரியவில்லையானுலும் கருதல் அளவையால் உணர்தல் வேண்டும். ஆன்மா தான் செய்த நல்வினை தீவினைகளால் பிறப்பு இறப்பு என்ற துவந்துவங்களை யடைந்து இன்ப துன்பங்களை நுகர்கின்றது. பாம்பு சட்டையை

உரிப்பது போல் ஞானிகள் ஞான நிஷ்டையால் இந்த உடம்பை உதறித் தள்ளிவிட்டுப் பிரம்மத்தை அடைகின்றார்கள். கங்கை யமுனை முதலிய நதிகள் கடலில் கலந்தவுடன் அதன் நாம ரூபங்கள் மாறி கடலாகவே ஆவதுபோல், சீவன் பிரம்மத்துடன் கலந்து பிரம்ம மாகவே ஆகின்றது'' என்று உபதேசித்தார்.

பரம்பொருளே ஒரு அந்தணனாக வந்து மிதிலையை எரித்தார். அப்போது ஜனகன் சிறிதும் துயரப்படாமல் "எனக்கு என்று எதுவும் இல்லை. என்பொருள் எரியவில்லை'' என்று ஆடாமல் அசையாமல் முறுவல் செய்த முகத்துடன் இருந்தார் ஜனகர். அதைக்கண்டு எல் லோரும் ஆச்சர்யப்பட்டார்கள். இறைவனருளால் மிதிலாபுரி பழையபடியே விளங்கியது. இவ்வாறு ஜனகனைப்போல் பற்றற்று வாழ்கின்றவன் ஞானி'' என்றார்.

### சுவர்ச்சலை

தருமர் "பெருமானே! இல்லறத்திலிருந்து கொண்டே முத்தி பெற்றவர் வரலாற்றை எனக்குச் சொல்லவேண்டும்'' என்று கேட் டார்.

பீஷ்மர், "அறிவுள்ளவனே ! நீ கேட்டது சம்சார பயத்துக்கு மருந்து போன்றது. முன் நடந்த ஒரு இதிகாசத்தைக் கூறுகின்றேன். கேள்.

தேவலர் என்ற அந்தண முனிவர் ஒருவர் இருந்தார். அவர் அறநூல் கற்ற சமர்த்தர்; அறங்களையறிந்தவர். ஒழுக்கமுள்ளவர். தேவபூஜை செய்பவர். அவருக்குச் சுவர்ச்சலையென்ற கன்னிகை யிருந்தாள். அவள் உருக்கிவார்த்த தங்கச்சிலை போல் விளங்கினாள். புதல்விக்கு நல்ல கணவன் அமையவேண்டும் என்று தந்தை சிந்தை செய்தார். சுவர்ச்சலை பிதாவைப்பார்த்து "அப்பா: பொட்டையும் பொட்டையில்லாதவருமான ஒருவருக்கு என்னைக் கொடுக்கவேண் டும்'' என்று இரகசியமாகச் சொன்னாள். தேவலர் "மகளே ! அம்மா! உன் சொல் விகாரமாக உளது. மங்களமாக இல்லை. பித் துப்பிடித்தவளைப் போல் பேசுகின்றாயே'' என்றார்.

சுவர்ச்சலை, "பிதாவே! நான் பித்துப்பிடித்தவளல்லேன். சீரிய கூறிய அறிவுடன்தான் கூறுகின்றேன். என்னை விரும்பிவருகின்ற அந்தணர்களை என்பால் அழைத்து வாரும். நான் அவர்களைப் பார்த் துக் கணவனாக வரிப்பேன்'' என்றாள்.

தேவலர் தன் சீடர்களைப்பார்த்து ''மாணவர்களே! வேதங்களை அறிந்தவர்களும், பிறப்பிலும் குலத்திலும் தூய்மையுள்ளவர்களும், தாய் வழியிலும் தகப்பன் வழியிலும் பரிசுத்தர்களும். ஆசார சீலர் களும். அழகுள்ளவர்களும், நோயற்றவர்களும். அழகும அறிவும்

வலிமையும் குணமும் உள்ளவர்களும். க்ஷேத்திரங்களின் கலப்பற்ற வர்களும், பிரம்மர்சயம் முடித்தவர்களும், தாய் தந்தையருடன் கூடியவர்களும், என் கன்னிகையை மணம்புரிய விரும்புகின்றவர்களு மான அந்தணர்களைப்பார்த்து விரைவில் அழைத்து வாருங்கள்'' என்று பணித்தார்.

சீடர்கள் ஆச்ரமங்களிலும் அங்குமிங்குமுள்ள கிராமங்களிலும் உள்ள உத்தம வேதியர்களிடம் தெரிவித்தார்கள். தேவலரது பெரு மையையும், சுவர்ச்சலையின் சிறப்பியல்புகளையும் அறிந்திருந்த அந் தணர்கள் பலாப்பழத்தை நாடிவரும் ஈக்களைப்போல் தேவலரது ஆச்சிரமத்தை யடைந்தார்கள்.

தேவலர் தன்பால் அன்பாகி வந்த அந்த அந்தணர்களை விதிப்படி வரவேற்றார். தக்கபடி உபசரித்தார். "மகளே! உன்னை விரும்பிவந்த முனிகுமாரர்களைப் பார்த்து உனக்கு விருப்பமான வரனை வரித்துக் கொள். உன் விருப்பப்படி விவாகஞ் செய்து தருவேன்'' என்றார்.

அழகின் சிகரமாக விளங்கும் சுவர்ச்சலை அந்த முனிகுமாரர்களை வணங்கினாள். இந்த சபையில் பொட்டையும் பொட்டையில்லா தவர் யார். அத்தகைய ஒருவரை யான் பதியாக அடைவேன்'' என்றாள். இதைக்கேட்ட முனிகுமாரர்கள் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள். ஒன்றும் பேசவில்லை. இவள் அறிவில்லா தவள் என்று எண்ணி தேவலரை உள்ளத்தால் இகழ்ந்து, சினத் துடன் வந்த வழியே திரும்பிச் சென்றார்கள். சுவர்ச்சலை பிதாவின் வீட்டில் இருந்து வந்தாள்.

உயிர்கட்கு நன்மை செய்பவரும், அறிஞரும், நீதியில் வல்லவரும், நல்லவரும், பிரம்மசர்யமுள்ளவரும், ஆத்ம தத்துவத்தைப் பகுத் தறிந்தவரும், தாய் தந்தையுள்ளவரும், நற்குணக்கட்லும், உத்தால கரது தவப்புதல்வரும் ஆன சுவேதகேது என்ற முனிகுமாரர், சுவர்ச் சலையின் செய்தியைக் கேட்டு அவளை விரும்பி விரைந்து அங்கு வந்தார்.

தேவலர் அவரை முறைப்படி வரவேற்பு செய்தார். "அம்மா! குழந்தாய்! நீ இவரை வரித்துக்கொள். இவர் அறிவில் பெரியவர்: வேத வேதாங்கங்களில் கரைகண்டவர்'' என்று கூறினார். சுவர்ச்சலை அதைக் கேட்டு சிறு சினத்துடன் முனிபுத்திரரை நிமிர்த்து பார்த் தாள்.

சுவேதகேது, "கல்யாணீ! நான் பொட்டையும் பொட்டையில் லாதவனும் என்று அறிக. நான் இந்த உலகைப்பார்க்கும் போது கண் ணற்றவன். பிரம்மத்தைப் பார்க்கும்போது கண்ணுள்ளவன், பிரம்ம ஞானக் கண்ணில்லாத எல்லோரும் பிறவிக் குருடர்கள். நான் விழித் துக் கொண்டிருக்கின்ற குருடனாகஇருக்கின்றேன். ஆனால் பரம்பொரு

ளைக் காணும் கண் எனக்கு மிக நன்ருக இருக்கின்றது. ஆதலால் என்னைக் கணவனுக நீ வரித்துக்கொள்'' என்ருர். சுவர்ச்சலை அவரைக் கணவனுக வரித்தாள். தேவலர் உத்தாலகருடன் கூடி சுவேதகேது வுக்கும் சுவர்ச்சலைக்கும் வேதவிதிப்படி திருமணஞ்செய்து வைத்தார். சுவேதகேதுவைப்பார்த்தவர்கள். 'நாராயணரே இந்த வடிவில் வந் திருக்கின்ருர் போலும்'' என்று கூறி வியந்தார்கள்.

சுவேதகேது சுவர்ச்சலையுடன் இல்லறமாகிய நல்லறஞ் செய்ய லானுர். ஒருநாள் மனைவியைப் பார்த்துக் கூறுகின்ருர். "அழகுள்ள வளே! வேதங்களில் கூறப்பட்ட கர்மங்கள் அனைத்தையும் நீ என் னுடன் கூட மிருந்து செய். நான் செய்கின்றேன் என்ற எண்ண மின்றிச் செய். கர்ம பலன்களை விரும்பாமல் இருக்கவேண்டும்'' என் ருர். யாகங்கள் பல செய்து தேவர்களைத் திருப்தி பண்ணினுர். மக் களைப் பெற்று பிதிர்களைத் திருப்திபடுத்தினுர். கணவனும் மனைவியும் கருத்து ஒன்றி ஈருடம்பு ஒருயிராக நின்று இல்லற தருமத்தை நடாத் தினுர்கள். அவர்கள் உள்ளத்தில் பாசபந்தம் இல்லை.

ஒருநாள் கணவனைப்பார்த்து சுவர்ச்சலை கேட்டாள் "நீர் யார்? இதை எனக்குச் சொல்லவேண்டும்'' என்ருள். பெண்ணே! என்னை நீ யார்? என்று கேட்கின்ருயே! உடம்பைக் கேட்கின்ருயா? என் ஆத்மாவைக் கேட்கின்ருயா? என் ஆன்மா பேசாது. ஆத்மாவுக்குப் பேர் கிடையாது'' என்ருர்,

சுவர்ச்சலை சிரித்துக்கொண்டு "மகா முனிவரே! நான் தங்களைப் பார்த்துக் கேட்பது உடம்பையன்று. உயிரைத்தான் கேட்கின்றேன். நீர் ஏன் கர்மங்களைச் செய்கின்றீர்? உண்மையான தத்துவத்தைச் சொல்லும்'' என்ருள். சுவேதகேது கூறுவார்; நான் கன்மங்கள் செய்வது உலகத்தின் பொருட்டு. சிறந்த மனிதன் எதனை எதனைச் செய்கிருன்ருனே அதனைத்தான் உலகம் பின்பற்றும். நான் சத் கரு மங்களைச் செய்யவில்லையானுல் உலகம் என்னைப்பார்த்து கன்மங்களைக் கைவிட்டு நிலைகுலைந்து போகும். ஆதலால் உலக நலன் கருதி நான் கருமங்களை மேற்கொண்டிருக்கின்றேன்'' என்ருர்.

சுவர்ச்சலை "முனிவரரே எது சப்தம்? எது அர்த்தம்?'' என்று கேட்டாள். சுவேதகேது "மதிமிகுந்த மானே! எழுத்துக்களை மாறு தலுடன் உச்சரிப்பதனுல் வெளியாவது எதுவோ அது சப்தம்; அந்த சப்தத்தால் அறிவிப்பது அர்த்தம்'' என்ருர்.

சுவர்ச்சலை "நாதரே? இந்தச் சப்தத்துக்கும் அர்த்தத்துக்கும் சம்பந்தம் இருக்கின்றதா? இல்லையா? சப்தமுள்ள இடத்தில் அர்த்த மிருக்குமானுல் அவைகளுக்குள்ள சம்பந்தத்தை உள்ளபடி எனக்கு உரைக்கவேண்டும்'' என்று கேட்டாள். சுவேதகேது, "சப்தத்துக்கும் அர்த்தத்துக்கும் நிரந்தரமான சம்பந்தமே இல்லை. தாமரை இலையில்

நீர் இருப்பதுபோல் அந்த சம்பந்தம் இருக்கின்றதென்று நீ தெரிந்து கொள்'' என்று சொன்னர்;

சுவர்ச்சலை சப்தத்தின் நிலையானது அர்த்தத்தைப்பற்றிய தன்றோ? அந்த நிலையானது சம்பந்தமில்லாமல் இராதே? இதை விளக்கமாக விளம்பவேண்டும்'' என்றாள்.

சுவேதகேது ''அந்த சம்பந்தமானது விசேஷமாக இருக்குமானல் அர்த்தத்தை அறிவிக்கும் தன்மை என்ற சம்பந்தம் இருக்கின்றதென்று சொல்லலாம். எப்பொழுதும் சப்தத்தை உச்சரிப்பதனல் அர்த்தம் அறியப்படுகின்றது'' என்றார்.

''சுவர்ச்சலை ''அர்த்தமானது சப்தத்தின் இருப்பிடம் என்று நான் கேள்விப்பட்டிருக்கின்றேன். அவ்விதமான அர்த்தமானது சப்தத்துடன் சம்பந்தமாயிருக்கின்றபோது, சம்பந்தம் இல்லை யென்று நீர் சொல்லுவது விரோதமாக இருக்கின்றதே'' என்றாள்.

''பெண்மணியே! இவ்விஷயத்தில் விரோதமாய்ச் சொல்லவில்லை. உலகமானது ஆகாயமின்றி இருக்கமுடியாது. ஆனல் ஆகாயம் உலகத்துடன் சம்பந்தப்படுவதில்லை. இதுவும் அதுபோல் என்று தெரிந்துகொள்'' என்றார்.

சுவர்ச்சலை ''நான் என்னும் இந்தப் பதமானது எப்பொழுதும் ஆத்மாவைப் பற்றிக் கொண்டிருக்கின்றது என்பது தெளிவாகின்றது. சப்தங்கள் ஆத்மாவைப்பற்றவில்லை யென்பது பொய்யாகின்றதே'' என்றாள். சுவேதகேது ''பெண்மணியே! நான் என்ற சப்தம் அகங்காரத்தைப் பற்றியதாகும்; ஆத்மாவைப்பற்றியதன்று. குணங்களுடன் கூடிய பொருள்களை யறிவிக்கும் சப்தங்கள் சிந்தைக்கு எட்டாத ஆத்மவஸ்துவைப் பற்றியவைகள் அல்ல'' என்றார்.

சுவர்ச்சலை, ''தபோதனரே! எனக்கு ஆத்ம தத்துவத்தை உபதேசித்தருளும்'' என்றாள். சுவேதகேது. ''நல்ல விரதமுள்ளவளே! ஆத்மா என்றும் உள்ள பொருள். அது அழிவற்றது. இந்த ஆத்மாவுக்குள் பரயாத்மா உறைகின்றது. உயிர்க்குயிரான பரம்பொருள் ஆணுமன்று; பெண்ணுமன்று; அலியுமன்று; அது ஞானமே வடிவானது. அவரை வேதங்களும் அறிகின்றதில்லை'' என்று பதிலட்சங்களைப் பலவாக உபதேசித்தார். உபதேசம் பெற்ற சுவர்ச்சலை பதிக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தாள்: சுவேதகேது நித்திய நைமித்திய கர்மங்களைப் புரிந்துகொண்டு எங்கும் நிறைந்த இறைவனிடம் கர்மங்களை அர்ப்பணம் புரிந்து நற்கதி பெற்றார். ஆதலால் இல்லறத்திலிருந்தும் முத்தி பெறலாம்'' என்று கூறினர்.

(தொடரும்)

## புதிய வெளியீடுகள்

1. **கட்டுரைக் கனிகள்**

பல ஆண்டுகளாக நமது திருப்புகழமிர்தத்தில் வெளிவந்துள்ள முக்கியமான 67 கட்டுரைகளின் தொகுப்பு. மிகவும் குறைந்த விலையில் வெளியிடப்பட்டுள்ளது. 420 பக்கங்கள் விலை ரூ. 3—00. பதிவு தபாற் செலவு ரூ. 1—10.

2. **கற்புக் கனிகள்**—முதற் புத்தகம்

கற்பு என்னும் தலைப்பின்கீழ் வெளிவந்த சிறுகதைகள் 21 கொண்ட தொகுப்பு விலை ரூ. 1—00. தபாற் செலவு 0—20.

3. **கற்புக் கனிகள்**—இரண்டாம் புத்தகம்

கற்புக் கதைகள் 16 கொண்ட தொகுப்பு விலை ரூ. 1—00. தபாற் செலவு 0—20

4. **கற்புக்கனிகள்**—மூன்றாவது புத்தகம் (11 சிறுகதைகள்)

ரூபாய் 1—00. தபாற் செலவு 0—20.

2, 3, 4க்குரிஜிஸ்டர் தபாற் கட்டணம் 0—75 வேறு

---